පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

05.08.2019 / 0830 – 1030

| | |
|---|---|
| බුද්ධ ධර්මය | I |
| பௌத்த சமயம் | I |
| Buddhism | I |

41 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*

**அறிவுறுத்தல்கள்:**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **02** புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் **100** ஆகும்.

**1.** தாங்கள் ஏற்றுக் கொண்ட கருத்துக்களை வெற்றியடையச் செய்வதற்காக புத்தர் காலத்தில் வாழ்ந்த சமண - பிராமணர்கள் வாத, பிரதிவாதங்களில் ஈடுபட்டிருந்தனர் எனப் பாளி இலக்கியங்களின் மூலம் அறியக்கிடக்கின்றது. இவ்விடயத்தில் புத்தரின் தனித்துவமாயிருந்தது,
(1) மற்றைய பிராமணர்களுடன் வாதிட்டுத் தோற்கடித்தல்
(2) தோன்றுகின்ற பிரச்சினைகள் எதனையும் பின் போடாமை
(3) மற்றைய சமண - பிராமணர்களுடன் வாதிடச் செல்லாமை
(4) தான் வாதத்தில் ஈடுபடாமல் தனது சிரேஷ்ட சிஷ்யர்களை அதற்காக அனுப்புதல்
(5) பொருத்தமான சந்தர்ப்பங்களில் மட்டும் சமணர், பிராமணர்களுடன் வாதிடுதல்

**2.** வண. ஆனந்த தேரருக்கும் பிக்குகளுக்குமிடையே புத்தரின் ஆச்சரியத்துக்குரிய தனித்துவம் பற்றிய உரையாடலை புத்தர் ஒருமுறை கேட்டார். அதன்பின்னர் அவர் வண. ஆனந்த தேரரை நோக்கி ததாகதரின் அற்புதமான தனித்துவத்தை நீங்கள் விளங்கிக் கொள்வீராக என்று கூறி பத்தொன்பது விடயங்களைச் சுட்டிக் காட்டினார். அவற்றுள் ஒன்றாக அமைவது,
(1) பலவிதமான அதிசயங்களை (இதிபாத) நிகழ்த்திக் காட்டும் வல்லமை
(2) போதிசத்துவராயிருக்கும் வேளையிலேயே ஆனாபானாசதியை அபிவிருத்தி செய்தல்
(3) தாயின் கருவில் உருவான போதிசத்துவருக்கு நான்கு கடவுளரின் பாதுகாப்பைப் பெற்றமை
(4) இரட்டை அதிசயங்களை (யமகபிராதிஹார்ய) நடத்திக் காட்டும் வல்லமை
(5) சகல பிராணிகளதும் 'ஆஸயானுஸய' வை தெரிந்து கொண்டிருந்தமை

**3.** புத்தர் முப்பத்திரெண்டு அதி விஷேட உடலியல் லட்சணங்களைக் கொண்டிருந்தார் எனப் பாளி சூத்திர போதனைகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்றான 'எணிஜங்கோ' என்பதன் கருத்தாவது,
(1) சமதளத்தைக் கொண்ட இரு பாத அடிப்பாகங்களைக் கொண்டிருத்தல்
(2) சிங்கத்தைப் போன்று நன்கமைந்த மார்புப் பகுதியைக் கொண்டிருத்தல்
(3) தோள்கள் இரண்டிற்குமிடையே இடைவெளி இல்லாதிருத்தல்
(4) மானுக்கமைந்திருப்பது போன்று முறைப்படி வட்டமாக அமைந்த கெண்டைக் கால் பகுதியைக் கொண்டிருத்தல்
(5) தூசி படியாத சருமத்தைக் கொண்டிருத்தல்

4. புத்தரிடத்தில் விளங்கிய ஒன்பது பண்புகளுள் ஒன்று விஜ்ஜாசரண சம்பன்ன என்பதாகும். அதில் விஜ்ஜா என்பதனால் எட்டு ஞானங்கள் (ஞாணதிகம) வெளிப்படுத்தப்படுகின்றன. அவற்றுள் ஒன்றாக அமைவது,
(1) அகம்பன ஞானம்
(2) மஹாகருணா ஸமாபத்தி ஞானம்
(3) விதர்ஷனா ஞானம்
(4) ஆஸயானுஸய ஞானம்
(5) ஸப்பஞ்ஞுத ஞானம்

5. உண்மையைத் தேடுவதில் ஈடுபட்டிருந்த சித்தார்த்த கௌதம போதிசத்துவர் ஆலாரகாலாம, உத்தகராமபுத்த ஆகிய ஆசிரியர்களிடத்திலிருந்து சமயவாதங்களைப் பயின்றார் எனக் குறிப்பிடப்படுகின்றது. பின்னர் அவர் ஆசிரியர்களை விட்டுச் சென்றதற்கான காரணமாவது,
(1) அவர்கள் மித்யாதிருஷ்டிக்காரர்களாயிருந்தமை
(2) அவர்கள் தன்னலமுடையவர்களாயிருந்தமை (அத்திகிலமதானுயோகி)
(3) அவர்களது சிஷ்யர்களில் அரைவாசிப் பேரை பொறுப்பேற்காது இருந்தமை
(4) அவர்களிடமிருந்து கற்றுக் கொள்வதற்கு எதுவுமில்லாமை
(5) சித்த சமதவைக் கடந்து செல்வதற்கு அவர்களுக்கு இயலாதிருத்தலைக் கண்டு கொண்டமை

6. தம்ம வணக்கத்தில் பயன்படுத்தப்படும் செய்யுளில் **'பச்சத்தங் வேதிதப்பொ விஞ்ஞூஹி'** என்பதன் கருத்தாவது,
(1) தர்மம் பிரத்யக்ஷமாக (கண்ணெதிரே) காட்டப்பட வேண்டும்.
(2) நிப்பான வை உணர்ந்து கொள்வதற்கு உதவும்.
(3) அறிவுடையவர்கள் தனித்தனியே தாமே உணர்ந்தறிதல் வேண்டும்.
(4) சம்சாரத்தில் வாழும் உயிரினங்களுக்கு 'நிப்பான' விற்கு வழிகாட்டுகிறது.
(5) சரியான வழிமுறைகளில் ஈடுபடுத்துகிறது.

7. நான்கு சீரிய உண்மைகள் (சதுரார்ய ஸத்ய) என்பது மதிப்பிற்குரியவரும் துக்கத்தையும், துக்கத்தை மாற்றும் மார்க்கத்தையும் விபரிக்கும் புத்தரால் போதிக்கப்பட்டவையே அன்றி தெய்வீக இரகசியம் அல்ல. இந்தக் கருத்து நேரடியாகத் தெரிவிக்கப்பட்டிருப்பது,
(1) தம்மஸங்கிணீ பிரகரணத்திலாகும்.
(2) சூல்லவக்கபாளியிலாகும்.
(3) விசுத்தி மார்க்கத்திலாகும்.
(4) தம்மசக்கப்பவத்தன சூத்திரத்திலாகும்.
(5) மிலிந்தபிரஷ்ன விலாகும்.

8. "லோப, த்வேஷ, மோஹ என்பன அகுஸல (தீய) சிந்தனைகள். இவை தீமைக்கும் துக்கத்திற்குமானவையாகும். லோபமின்மை, த்வேஷமின்மை, மோகமின்மை என்பன குஸல (நன்மையான) சிந்தனைகளாகும். இவை நன்மைக்கும் சுகத்திற்குமானவை என்று சுயேச்சையாகச் சிந்தித்து தீர்மானிக்கவேண்டும்" என புத்தர் போதித்திருப்பது,
(1) சுப மானவக்கவுக்கு
(2) கிருஹஸ்தனான உபாலிக்கு
(3) மஹாநாம சாக்கியருக்கு
(4) வண. ராகுல தேரருக்கு
(5) காலாம கோத்திரத்தினருக்கு

9. 'எல்லாம் உள்ளது சாஸ்வதம், எல்லாம் இல்லாதது அஷாஸ்வதம் என இரு எல்லைகளையுமே புறக்கணிக்கும் புத்தர் கச்சானகொத்த சூத்திரத்தில் வெளிப்படுத்துவதாவது,
(1) படிச்சசமுப்பாத
(2) சப்த விசுத்தி (ஏழுவகைத் தூய்மை)
(3) சதுரார்ய சத்ய தர்ம (நான்கு சீரிய உண்மைகள்)
(4) த்ரி லக்ஷண தேஷனா (மூன்று இயல்பு கொண்ட போதனைகள்)
(5) அரிஅட்டாங்கி மக (சீரிய எட்டு அங்கங்களைக் கொண்ட மார்க்கம்)

10. இவ்வுலகிலும் மறு உலகிலும் விருத்தியைத் தருவதும் தமது நன்மையையும், பிறர் நன்மையையும் சீர்தூக்கி சமநிலையில் கொள்ளும் வகையிலானதுமான வழிகாட்டு நெறிகள் புத்தரது போதனைகள் பலவற்றில் சிதறிக் கிடக்கின்றன. கீழே காட்டப்பட்டுள்ள தர்ம கூற்றுகளுள் அத்தகையதொரு வழிகாட்டு நெறி **அல்லாத** கூற்று எது?
(1) திட்டேவ தம்மே யோ சத்தோ யோ சத்தோ ஸம்பராயிகோ
(2) அத்தஹிதாய படிபன்னோ பரஹிதாய
(3) த்விசக்குங் பன ஸேவேத ஸெட்டங் புரிஸ புக்கலங்
(4) கதபுங்ஞோ உபயத்த நந்ததி
(5) அத்தனோவ ஸுதந்தெந நாதங் லபதி துல்லபம்

[பக். 3 ஐப் பார்க்க

11. புத்தர் காலத்து இந்தியாவில் சமண குருகுலங்களில் காணப்பட்ட பொது லட்சணமாயிருந்தது,
(1) நிர்மாணவாதியாதல்
(2) அத்தகிலமதானுயோகியாதல்
(3) பாவனாவை ஏற்றுக் கொள்ளல்
(4) பிரஹ்மசாரியாதல்
(5) ஆஜீவகயர் ஆதல்

12. உபஸம்பதா பெற்ற பிக்குகளுக்கான புத்திமதிகளான நான்கு விநயங்களும் மஹாவக்கவில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை நிஸ்ஸய தர்ம என்று அழைக்கப்படுவன. அவற்றுள் ஒன்று
(1) துறவிகள் ஒற்றுமையுடன் செயற்பட வேண்டும்.
(2) வயதான பிக்குகளுக்கு ஆதரவளித்தல் வேண்டும்.
(3) பிராதிமோக்ஷ விதிகளுக்கு அமைவாகத் தம்மை அடக்கிக்கொள்ளல் வேண்டும்.
(4) துறவி ருக்முல, ஸெனஸீனவுடன் சேர்ந்து வாழ்தல்
(5) மக்கள் பலரின் நன்மையின் பொருட்டு தர்மத்தைப் போதித்தல்

13. பிக்கு ஒருவர் கிலேசத்தை ஒழிப்பதற்கு ஏதுவான மார்க்கபலத்தை அடையாது அது தன்னிடம் இருப்பதாகக் கூறுவாராயின் அவர் பாராஜிகாவில் வீழ்ந்தவராவர். நான்கு பாரஜிகாக்களுள் ஒன்றான இதனை இவ்வாறு அழைப்பர்
(1) உத்தரிமனுஸ்ஸ தம்ம
(2) சங்காதிஸேஸ
(3) அகரணீய
(4) மனுஸ்ஸவிக்கஹ
(5) பாடிதேசனீய

14. புத்தரினது சிஷ்ய சங்கமானது அதி விஷேஷ குணப் பண்புகளைக் கொண்டிருந்தது. அவற்றுள் ஞாயபடிபன்ன என்பது,
(1) தானத்தை ஏற்பதற்குத் தகுதியுடைமை
(2) சரியான பழக்கவழக்கத்தைக் கொண்டிருத்தல்
(3) நேர்மையான (சரியான) வழியில் செல்லுதல்
(4) விதர்சனா வழியில் இணைதல்
(5) தூரத்திலிருந்து கொண்டுவரும் பூசைப்பொருட்களை ஏற்றுக்கொள்ளும் தகைமை

15. பிக்கு சமூகம் ஆரம்பமான காலத்தில் புத்தர் அவர்களுக்கு விகாரை சேனாசனவில் வாழ்வதை விதிக்காமையினால் அவர்கள் இரவும் பகலும் காட்டு மரங்களின் கீழ் வாழ்ந்து வந்தார்கள். புத்தரின் அனுமதியுடன் முதன்முறையாக விகாரை சேனாசன அமைத்து வழங்கியவர்,
(1) அனேபிண்டு செட்டி
(2) பிம்பிசார மகாராஜா
(3) ராஜகஹ நகரச் செட்டி
(4) விசாகா எனும் மகா உபாசிகா
(5) ஜீவக எனும் வைத்தியர்

16. சாதாரண நிலையிலுள்ள ஆண்-பெண் சீடர்களின் விசேட திறன்களைக் கருத்தில் கொண்டு புத்தர் அவர்களை உயர் பதவிகளில் நியமித்தவகை 'எததக்க பாளி'யின் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது. அதற்கமைவாக, ஜீவக கோமாரபச்சருக்குக் கிடைக்கப்பெற்ற உயர்பதவி,
(1) நோயாளர்களான பிக்குகளைக் குணப்படுத்தியவர்களுக்கு மத்தியில்
(2) நம்பிக்கைக்குரிய வார்த்தைகளைக் கொண்டிருந்தவர்களுக்கு மத்தியில்
(3) அசையாத நம்பிக்கைக்குரிய கருணை கொண்ட சிஷ்யர்களுக்கு மத்தியில்
(4) சங்கத்தினருக்கு (பிக்குகளுக்கு)ப் பணிபுரியும் சிஷ்யர்களுக்கு மத்தியில்
(5) தனிப்பட்டவர்களின் உள்ளங்களை வென்ற கருணை கொண்ட சிஷ்யர்களுக்கு மத்தியில்

17. தேரவாத பௌத்த மஹாசபையைக் கூட்டுவதற்கு காரணமான சாசனப் பின்புலம், அந்தச் சபை சார்ந்த அமைப்புச் செயற்பாடுகள், அவற்றின் பிரதிபலன் முதலான விடயங்களை வெளிப்படுத்துவதற்கு உதவும் முதல் நிலை ஆதாரங்கள் பல உள்ளன. அவற்றுள் பாளி திரிபிடகத்தில் உள்ளடக்கப்படுவது,
(1) தீபவம்சம்
(2) நிகாய சங்கிரகம்
(3) மகாவம்சம்
(4) ஸமந்தபாஸாதிக
(5) சுல்லவக்கபாளி

[பக். 4 ஐப் பார்க்க

**18.** முதலாவது பௌத்த சபையைக் கூட்டுவதற்கு சுபத்திரரின் நியாயமற்ற கூற்று உடனடிக் காரணமாகக் காட்டப்பட்டாலும் சாசனம் சம்பந்தமான இன்னும் பல பிரச்சினைகள் இதற்கு பின்புலமாயிருந்தன என்பதை மூலாதாரங்களின் மூலம் எடுத்துக் காட்ட முடியும். அவற்றுள் ஒன்று,

(1) சில பிக்குகள் ஒழுக்கக் கேடான செயற்பாடுகளில் ஈடுபட்டமை
(2) மகாயானக் கருத்துக்கள் பரவியமை
(3) பிக்குகள் குருகுலங்களாகப் பிரிந்து சென்றமை
(4) எதிர்காலத்தில் தர்மம் தாழ்ந்து அதர்மம் மேலோங்கும் என மூத்த பிக்குகள் தெரிந்து கொண்டமை
(5) பிக்குகள் பொஹோபவுறுணு முதலியவற்றைச் செய்யாதிருந்தமை

**19.** இரண்டாவது பௌத்த மகாசபையைக் கூட்டுவதற்கு உடனடிக் காரணமாகக் காட்டப்படுவது விசால நகரத்து வஜ்ஜி புத்த பிக்குகளால் தஸ அகபவத்து ஏற்றுக் கொள்ளப்பட்டமையாகும். அதில் ஜலோகிகப்ப என்பதன் கருத்தாவது,

(1) முன்னையோரால் செய்யப்பட்டவற்றை அவ்வாறே பரம்பரையாகச் செய்தல்
(2) தங்கம், தங்க, வெள்ளி நாணயங்களை நிவேதனமாக ஏற்றுக் கொண்டமை
(3) புளிக்காத கள் குடிப்பதை ஏற்றுக் கொண்டமை
(4) பாலோ, தயிரோ அல்லாத பொருள் உண்பதை ஏற்றுக்கொண்டமை
(5) தழும்பு இல்லாத நிசீதனபவைப் பயன்படுத்தலை ஏற்றுக் கொண்டமை

**20.** புத்தர் பரிநிர்வாணமடைந்து மூன்று மாதங்களின் பின்னர் நடைபெற்ற முதலாவது பௌத்த மகாசபையில் புத்தர் போதித்த தர்ம விநயங்களைப் பாதுகாக்கும் பொறுப்பு குரு-சிஷ்ய பரம்பரையினரிடம் ஒப்படைக்கப்பட்டது. அப்போது அங்குத்தர நிகாய பொறுப்பளிக்கப்பட்டது,

(1) வண. மஹாசாரிபுத்திரர் உள்ளிட்ட சிஷ்ய பரம்பரையினரிடம்
(2) வண. அனுருத்தரை முதன்மையாகக் கொண்ட சிஷ்ய பரம்பரையினரிடம்
(3) வண. ராகுலவின் சிஷ்ய பரம்பரையினரிடம்
(4) வண. மஹாகாஷ்யப உள்ளிட்ட சிஷ்ய பரம்பரையினரிடம்
(5) வண. முகலனின் சிஷ்ய பரம்பரையினரிடம்

**21.** புத்தர் போதித்த தர்மமும் தோற்றுவித்த விநயமும் மூன்று வித பிடகமாயுள்ளது. அதில் விநயமென்று சொல்லப்படுவது,

(1) நன்கு வெளிப்படுத்தப்பட்ட கூற்றுகள் என்பதனால்
(2) பௌத்த சாசனத்தின் தொடர்ச்சி எனும் கருத்தினால்
(3) புத்தரினால் தர்மத்திற்கு மேலதிகமாக போதிக்கப்பட்டதால்
(4) கருத்து நன்கு வெளிப்படுவதனால்
(5) விஷேடமான கோட்பாடுகளைக் கொண்டிருப்பதனால்

**22.** சூத்திர பிடகத்தின் அமைப்புத் தொடர்பிலான சரியான கூற்று யாது?

(1) தீகநிகாய ஐந்து வர்க்கங்களைக் கொண்டது.
(2) அங்குத்தர நிகாயாவில் இருபது நிபாதங்கள் உள்ளன.
(3) சங்யுத்த நிகாயாவில் ஸீலக்கந்த வர்க்க உள்ளடக்கப்பட்டுள்ளது.
(4) மஜ்ஜிம நிகாய மூன்று பண்ணாஸகவைக் கொண்டது.
(5) குத்தக நிகாயவில் கோஸல ஸங்யுத்த உள்ளடக்கப்பட்டுள்ளது.

**23.** சூத்திர பிடகம் நிகாயக்களாக ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது முதலாவது பௌத்த மகாசபையின் போதாகும். அப்போது ஒவ்வொரு நிகாய நூல்களும் அவை உள்ளடக்கியிருந்த போதனைகளின் இயல்பினைக் கருத்திற் கொண்டு அழைக்கப்படலாயின. அதன்படி சங்யுத்த நிகாய என்பது,

(1) ஏக்கக, துக என்றிவ்வாறான வகையில் எண்ணிக்கை முறையில் தர்ம விடயங்கள் முன்வைக்கப்பட்டமை
(2) சுருக்கமாகப் புத்தரின் போதனைகளை வெளிப்படுத்தியமை
(3) ஓரளவு நீண்ட போதனைகளையும் சிறிய (சுருங்கிய) போதனைகளையும் உள்ளடக்கியமை
(4) பலவித கோட்பாட்டுக் கருத்துக்களை ஒன்றுபடுத்தியமை
(5) தம்ம போதனைகளை நன்கு வெளிப்படுத்தியமை

[பக். 5 ஐப் பார்க்க

**24.** விநய பிடகமாவது சுத்த விபங்க, கந்தக மற்றும் பரிவார என மூன்று வகையானதாகும். வத்தக்கந்தக உள்ளடக்கப்பட்டிருப்பது,

(1) பராஜிகாபாளியில்
(2) மஹாவக்கபாளியில்
(3) சுல்லவக்கபாளியில்
(4) பாசித்தியபாளியில்
(5) பரிவாரபாளியில்

**25.** சித்த, சைதஸிக, ரூப, நிப்பான எனப் பரமாத்த தர்மத்தைப் பகுப்பாய்வு செய்து காண்பிப்பது அபிதர்ம பிடகத்தின் தகைமையாகும். அதனை இவ்வாறு அழைக்க முடியும்

(1) வோஹார தேஷனா
(2) ஸாமுக்கங்ஸிக தேஷனா
(3) பரமத்த தேஷனா
(4) பரியாய தேஷனா
(5) நீதத தேஷனா

**26.** புத்தர் காலத்து இந்தியாவில் வாழ்ந்த பிராமணர்களும் சமணர்களும் தமது சிஷ்யர்களைக் குறிப்பிட்டதொரு விடுதலைக்கு வழிகாட்டினார்கள். பிராமணத்துவத்தின்படி அந்த நிஷ்டை இவ்வாறு அழைக்கப்பட்டது:

(1) கேவலத்துவம்
(2) பிரஹ்ம சகவ்யதா
(3) சம்சார சுத்தி
(4) அசங்கத
(5) இஷ்டாபூர்தம்

**27.** எல்லாம் வல்ல கடவுள் உள்ளார் என்றும் வேதங்களை அவரே வெளிப்படுத்தினார் என்றும் புராதன ரிஷிகளினூடாக அது பிராமணர்களுக்கு கிடைத்தது என்றும் வைதிக மரபு ஏற்றுக்கொள்கின்றது. இந்த போதனைகளைப் புத்தமதம் புறந்தள்ளிவிட்டு விடயங்களை விளக்குவது,

(1) தம்சக் பவத்தும் சூத்திரத்திலாகும்.
(2) பிராஹ்மன தம்மிக சூத்திரத்திலாகும்.
(3) பிரஹ்மவிஹார சூத்திரத்திலாகும்.
(4) சங்கி சூத்திரத்திலாகும்.
(5) தெவிஜ்ஜ சூத்திரத்திலாகும்.

**28.** புத்தர் காலத்து இந்தியாவில் பிரபலமான ஆறு சமய போதனையாளர்கள் அவர்களது சீடர்களுடன் இருந்ததாகக் குறிப்பிடப்படுகின்றது. வேறுபட்ட மதக் கொள்கைகளைக் கொண்டவர்களாயிருந்தபோதிலும் அவர்கள் யாவருக்கும் பொதுவான போதனையாயிருந்தது,

(1) எல்லாவற்றையும் சந்தேகத்திற்குட்படுத்துவது
(2) நிர்மாணவாதத்தை ஏற்றுக்கொள்ளாமை
(3) கர்ம விளைவுகளை புறந்தள்ளல்
(4) வீரியம் (முயற்சி) உத்சாகம் ஆகிய பயனற்றவை என்று கற்பித்தல்
(5) எல்லாமே பூர்வ கர்மத்தின் பயன்கள் என்பதை ஏற்றுக் கொள்ளல்

**29.** பின்வரும் கூற்றுகளுள் சமய ரீதியில் **அமையாதது** எது?

(1) எல்லா சங்கத தர்மங்களும் மூன்று லட்சணங்களைக் கொண்டிருக்கும்.
(2) அஸ்மீமானவை ஒழிப்பதற்கு அநித்ய சங்ஞாவை வளர்த்துக் கொள்ள வேண்டும்.
(3) திரிலக்ஷணவை கவனமாகப் பேணுதல் விபஸ்ஸனாவாகும்.
(4) கந்தாயதன தாது திரிலக்ஷணவிற்குக் கீழ்ப்பட்டதாகும்.
(5) தியான சமாபத்தியினுள் தோன்றும் சுகமானது நிலையற்றதொன்றாகாது.

**30.** மனித சமூகத்தின் தோற்றம், பரிணாமம் பற்றிய பௌத்த போதனைகளைக் கூறும் பிரதான ஆதாரங்களாயுள்ளது தீகநிகாயாவின் அக்கஞ்ஞ சூத்திரமாகும். அது,

(1) சமூகமானது சமமான நிலையிலிருந்து சமமற்ற நிலைக்கு விருத்தியானது என்பதை ஏற்றுக்கொள்ளவில்லை.
(2) காரண காரிய நியதியை ஏற்றுக் கொள்கின்றது.
(3) சமூக பரிணாமத்திற்குக் காரணமான உளவியல் காரணிகளைக் காட்டவில்லை.
(4) வர்ணாச்சிரமதர்மத்தை ஏற்றுக்கொள்கிறது.
(5) கர்மத்தைப் பொறுத்தே சுகதுக்கங்கள் பெறப்படுவன எனப் போதிக்கின்றது.

**31.** புத்தர் தமது புத்தத்துவத்திற்காக முயன்று கொண்டிருந்தவேளை சூழலின் அழகை வர்ணித்துள்ளது,

(1) வனரோப சூத்திரத்தில்
(2) மிலிந்த பிரஷ்னவில்
(3) பட்டானபிரஹாரணத்தில்
(4) அரியபரியேஸன சூத்திரத்தில்
(5) பரிவாரபாளியில்

[பக். 6 ஐப் பார்க்க

**32.** கிருஹஸ்த வாழ்க்கை முறையில் வெற்றியடைவதற்காக சமூக அமைப்புகளுள் செயற்படுத்தப்பட வேண்டிய சாரதர்மக் கோவையொன்று சிகால சூத்திரத்தில் திசை வணக்கத்தில் காட்டப்பட்டுள்ளது. அதற்கமைவாக சமண - பிராமணர்கள் கிருஹஸ்த மக்களுக்குப் போதிக்க வேண்டியது,

(1) புண்ணியச் செயல்கள் செய்வதற்கு
(2) மோட்சம் பெறுவதற்கு
(3) வயதானவர்களைக் கவனிப்பதற்கு
(4) சுவர்க்க வழியைக் காட்டுவதற்கு
(5) நிவேதனம், கிரியைகள் செய்வதற்கு

**33.** பல பகுப்பாய்வு விடயங்களை விளக்குதல் புத்தசமயத்தின் விசேட இயல்பாகும். அதற்கமைவாக சம்சார துக்கங்களை தம்மத்தில் விளக்கியிருக்கும் சந்தர்ப்பம் எது?

(1) துக்கேன ஸீகங் அதிகன்தப்பங்
(2) ஏதங் மம எசோ ஹமஸ்மிங், எசொமே அத்தா
(3) கிச்சங்வதாயங் லோகோ ஆபன்னோ
(4) சயங் கதங் துக்கங்
(5) அத்தகிலமதானுயோகோ துக்கோ

**34.** புத்தர் உபதேசித்த சம்சார துக்கங்களை நவீன அறிஞர்கள் இரண்டு விதமாக இனம் கண்டுள்ளனர். அவை சந்தானகத துக்க, ஸங்ஸ்தாகத துக்க என்பனவாகும். புத்த போதனைகளுள் ஸங்ஸ்தாகத துக்க என்பது விளக்கப்பட்டிருப்பது

(1) சக்கவத்திஸீஹநாத சூத்திரத்திலாகும்.
(2) ஸிகாலசூத்திரத்திலாகும்.
(3) மஹாதுக்கக்கந்த சூத்திரத்திலாகும்.
(4) மஹாநிதான சூத்திரத்திலாகும்.
(5) தம்மிக சூத்திரத்திலாகும்.

**35.** சீரிய எட்டுவகை மார்க்கங்கள் என்பது புத்தமதத்தின் விமுக்தி மார்க்கமாகும். அவ்வாறே அது வாழ்க்கை ஒழுக்கமுமாகும். அந்த வாழ்க்கை ஒழுக்க நெறியில் 'ஸம்மா கம்மந்தவிற்கு' அமைவாக,

(1) அறவழித் தொழிலில் ஈடுபடவேண்டும்.
(2) உடலால் ஏற்படும் அகுஸலங்கள் மூன்றிலிருந்து விடுபட வேண்டும்.
(3) செய்யக்கூடாத வியாபாரத்தைச் செய்தலாகாது.
(4) அரசசேவையில் ஈடுபடமுடியும்.
(5) முயற்சியுடன் பணம் சம்பாதித்தல் வேண்டும்.

**36.** நற்குணங்கள் இல்லாத மனிதன் பிராணிகளுக்குச் சமம் என புத்தமதம் எடுத்துக் காட்டுகின்றது. இது உண்மையாயினும் சமய ரீதியில் கவனிக்கும்போது சரியானது எதுவாயின்,

(1) பாவச் செயல்கள் செய்யும் மனிதனுக்கு விடுதலை இல்லை.
(2) மனிதன் தெய்வீகத்துக்கு அப்பால் செல்ல முடியாது.
(3) புத்தமதம் மனிதனின் மானசிக சக்தியை மதிக்கிறதேயன்றி அவனது உடல்சக்தியை மதிப்பதில்லை.
(4) மனிதக் கொலை செய்யுமிடத்து உபசம்பதா உரிமை இழந்துவிடும்.
(5) பாரமிதாவை நிறைவு செய்தல் தெய்வங்களுக்குக் கூட முடியும்.

**37.** உலகிலுள்ள பிராணிகளின் உள்ளங்களில் ஐந்து தடைகள் (நீவரண) தோன்றுவதாக புத்த போதனைகள் போதிக்கின்றன. ஸமத பாவனாவினால் இந்தத் தடைகளை அடக்க முடியும். 'உத்தச்ச குக்குச்ச நீவரண' என்பதன் கருத்தாவது,

(1) பெருமையும் சந்தேகமும்
(2) கர்வமும் பாசாங்கும்
(3) தன்னை உயர்வாகவும் மற்றையோரைத் தாழ்வாகவும் கருதுதல்
(4) கலக்கமும் பச்சாத்தாபமும்
(5) புகழ்ச்சியும் பின்னிற்கும் நிலையும்

**38.** புத்த மதத்தின்படி யோகி ஒருவருக்கு நல்ல மன ஒருமைப்பாட்டினூடாக முறைப்படி ஏற்படுத்தப்படக் கூடிய தியானங்கள் நான்காகும். அவற்றுள் இரண்டாவது உள்ளடக்கப்பட்டிருப்பது,

(1) பீதி ஸுக எகக்கதா
(2) விதக்க விசார
(3) விசார பீதி ஸுக எகக்கதா
(4) விதக்க விசார பீதி ஸுக
(5) ஸுக எகக்கதா

[பக். 7 ஐப் பார்க்க

39. யோகியொருவர் நீவரண முதலான கிலேசங்களை அடக்குவதன் மூலம் பெறக்கூடிய சமாபத்திகள் எட்டாகும். அவற்றுள் நெவஸஞ்ஞாஸஞ்ஞாயதன என்பது,
(1) நான்காவது அரூப தியானம்
(2) விபஸ்ஸனாவின் மூலம் பெறக்கூடியது
(3) ஒருபோதும் அழிந்து போகாத தியானம்
(4) இருதிப்ராதிஹார்ய வை செய்யும் இயல்புடைமை
(5) புத்த ஸாஸனமின்றிப் பெறமுடியாமை

40. "ஒரு பெண்ணோ ஆணோ குழந்தையோ இளைஞனோ தூய்மையான கண்ணாடியொன்றிலோ தூய நீரிலோ தன் முகத்தைப் பார்க்கும்போது அவனது முகத்திலுள்ள பருக்களோ மறைகளோ போன்ற களங்கங்கள் இருப்பதும் இல்லாததும் நன்கு தெரியும்." இந்த உவமையின் மூலம் தெளிவாவது,
(1) திப்பசக்கு ஞானம்
(2) ஐந்தாவது ஸமாபத்தி ஞானம்
(3) விபஸ்ஸனா ஞானம்
(4) மனோமயஸ் ருத்தி ஞானம்
(5) செதோபரிய ஞானம்

41. "இந்தச் செயல் தீயது. இது தீய பயனைத் தரும். இது நல்ல செயல். இதன்மூலம் நன்மையான பயன் கிடைக்கும்." என்று தீர்மானிக்கும் விதம் புத்தசமயத்தில் பல வழிகளில் காட்டப்பட்டுள்ளது. அத்தகையதொரு தர்ம பாடமாவது,
(1) பஞ்ஞாஜீவிங் ஜீவிதமாஹு ஸெட்டங்
(2) ஆரபத நிக்கமத யுஞ்ஜத புத்த ஸாஸனே
(3) அப்பமாதோ அமதபதங்
(4) ஸப்பகுஸலதம்மபஹீனோ குஸலதம்ம ஸமன்னாகதோ
(5) யஸ்ஸ அஸ்ஸுமுகோரோதங் விபாகங் படிஸேவதி

42. பின்வரும் கூற்றுகளுள் பக்தி, பௌத்த சிரத்தா பற்றிய சமயரீதியான கூற்றினைத் தெரிவு செய்க.
(1) சத்தாவும் பக்தியும் முற்றிலும் சமமானவை.
(2) பக்தி, சத்தாவுக்கு அடிப்படையாகும்.
(3) பௌத்தர் ஒருவர் மும்மணிகளில் பக்தியுடையவராதல் வேண்டும்.
(4) புத்த சமயம் பக்தி பற்றிப் போதிக்கவில்லை.
(5) பல சூத்திர போதனைகளில் பக்திக்கு மதிப்பு அளிக்கப்பட்டுள்ளது.

43. ஒழுக்க போதனை (சீல சிக்ஷா) களைப் பின்பற்றுவதனால் இவ்வுலகிலும் மறு உலகிலும் பெறப்படும் ஐந்து நன்மைகள் பற்றி புத்தசமயத்தில் காட்டப்பட்டுள்ளது. அவற்றுள் ஒன்று,
(1) சில், அனுஷ்டிப்பவர்கள் உயர் பதவி பெறுவர்.
(2) சீலத்தை அனுஷ்டிப்பதனாலேயே நிப்பான சுகம் கிடைக்கும்.
(3) சீலமுடையவர் மரபுவழி ஒழுக்கத்தை மட்டும் கடைப்பிடிப்பார்.
(4) சீலத்தை ஒரு பழக்கமாகக் காப்பாற்ற வேண்டும்.
(5) சீல ஒழுக்கமுடையவர் சோம்பலின்மையால் பெரும் செல்வத்தையடைவார்.

44. பாபச் செயல்களிலிருந்து விடுபட வேண்டும் என்பதனையும் புண்ணியச் செயல்களில் ஈடுபடவேண்டும் என்பதனையும் அதன் மூலம் சுகம் பெறலாம் என்பதனையும் பௌத்தர்கள் அறிவார்கள். இருப்பினும் அவர்களிடையே காணப்படும் **தவறான** எண்ணம்,
(1) புண்ணியம் இந்த உலகிலும் மறு உலகிலும் விளைவுகளையுடையது.
(2) புண்ணியம் செய்தல் துறவு வாழ்க்கைக்கு உதவாது.
(3) புண்ணியம் செய்வதனால் மட்டுமே நிப்பானவை அடைந்து விட முடியாது.
(4) புண்ணியத்துக்கும் குஸல காரியத்துக்குமிடையே வேறுபாடு உள்ளது.
(5) புண்ணியம் செய்பவருக்கு ஞானம் சித்திக்கும்.

45. யாரொருவரும் இன்னொருவரது முன்னேற்றத்தையோ சுகத்தையோ கண்டு ஒரு போதும் பொறாமை கொள்ளலாகாது. அதனைக் கண்டு சந்தோஷமடைய வேண்டும். இந்தக் குணப்பண்பானது
(1) முதிதா
(2) அர்தசர்யா
(3) மெத்தா
(4) அப்பிச்ஜதா
(5) உபேக்ஷா

[பக். 8 ஐப் பார்க்க

**46.** செல்வத்தைச் சம்பாதிப்பதற்கான இலகுவான வழியொன்றைக் கண்டு கொள்ளும் ஒருவர், கழிவுசெய்யப்பட்ட தேயிலைத் தூளை சிறு பொதிகளாக்கி விற்று சுகமாக வாழ்க்கையைக் கழித்து வந்தார். புத்தசமயம் போதிக்கும் செய்யக்கூடாத வியாபாரங்களுள் இது அடங்காததால் "அது தவறாகாது" என்று ஒருவர் வாதிட்டார். இது தொடர்பாகக் கூறக்கூடியது,
(1) அவரது வாதம் சரியானதாகும்.
(2) இது தவறான வாழ்வாதாரமாகும். (மிச்சா அஜீவ)
(3) இது சரியான செயலாகும். (ஸம்மதா கம்மந்த)
(4) அவர் நல்ல முகாமைத்துவமுடைய ஒரு வியாபாரியாவர்.
(5) இது அத்தீ ஸுகத்தினுள் அடங்குகின்றது.

**47.** செல்வத்தை நுகருமிடத்து பௌத்தர் ஒருவர் பின்பற்ற வேண்டிய விடயங்கள் பல புத்தரின் போதனைகளுள் (ஆங்காங்கு) சிந்திக் கிடக்கின்றன. அத்தகைய தர்ம பாடமாக அமைவது,
(1) உட்டாதா விந்ததே தனம்
(2) தனம் ஸெட்டங்வ ரக்கதி
(3) நிஸ்ஸரண பஞ்சஹும் பரிபுஞ்சதி
(4) ஆரக்ஹேன குத்தியா ஸம்பாதேதி
(5) விஜிதே அதனா அஸ்ஸு தேஸங்ச தனமுப்பாதெய்யாஸு

**48.** புத்த மதத்தின்படி அரச பரிபாலனம் தசராஜ தர்மத்திற்கேற்ப நடத்தப்பட வேண்டும். அவற்றுள் ராஜதர்மத்தில் 'அஜ்ஜவங்' என்பது குறிப்பது,
(1) தயாளமுடைமை
(2) நேர்மையாகச் செயற்படல்
(3) மென்மையான, விட்டுக் கொடுக்கும் தன்மையுடைமை
(4) செல்வத்தைச் சம்பாதிப்பதற்கு உதவியாயிருத்தல்
(5) மக்களுக்குப் பாதுகாப்பளித்தல்

**49.** அரசனாம்தன்மை, அரசாட்சி பற்றிய போதனைகளைக் கொண்ட சூத்திரங்கள் பல உள்ளன. அவற்றுள் மிருகங்கள், பறவைகளைப் பாதுகாப்பது அரசனது பொறுப்பு என எடுத்துக் காட்டுவது,
(1) ரஜ்ஜ சூத்திரம் (2) சக்கவத்திஸீஹநாத சூத்திரம்
(3) மஹாபரிநிப்பான சூத்திரம் (4) அதம்மிக சூத்திரம்
(5) அக்கஞ்ஞ சூத்திரம்

**50.** அரச பரிபாலனம் பற்றிய பௌத்த போதனைகளுள் இடம்பெறும் ஸப்த அபரிஹானீய தர்மங்களில் குறிப்பிடப்படுவதற்கிணங்க ஆட்சியாளர் பிரஜைகளின் நன்மையை முன்னிட்டு மேற்கொள்ள வேண்டிய செயற்பாடாவது,
(1) செல்வம் சம்பாதிக்கும் வழிகளைக் காட்டுதல்
(2) வணக்கத்திற்குரிய இடங்களை மதித்து நன்மை செய்தல்
(3) படைவீரர்கள் நல்வாழ்வு வாழக்கூடிய வகையில் வேதனம் வழங்குதல்
(4) பொதுமக்களுக்குச் செல்வம் வழங்குதல்
(5) பொதுமக்களின் உளவளர்ச்சிக்கு வேண்டிய ஆதரவு காட்டுதல்

* * *

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

බුද්ධ ධර්මය II
பௌத்த சமயம் II
Buddhism II

41 T II

06.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

**அறிவுறுத்தல்கள்:**

※ **பகுதி I** இல் **இரண்டு** வினாக்களையும், **பகுதி II** இல் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

**1.** (i) புத்தரது அதிவிஷேடமான (ஞானாதிகம) அறிவுகளில் **இரண்டின்** பெயர்களைக் குறிப்பிடுக.

(ii) 'ஸத்தா' எனப்படும் புத்தரின் குணத்தை அறிமுகப்படுத்துக.

(iii) 'ஸத்துஸ்ஸதோ' எனப்படும் மஹாபுருஷலக்ஷணத்தை விளக்குக.

(iv) 'ஆனுபுப்பீகதா' என்பதனை விவரிக்குக.

(v) 'புத்தர் தீவிரவாதி அல்லர்' விமர்சிக்குக. (20 புள்ளிகள்)

**2.** (i) 'ஒபநயிகோ' எனும் சமய இயல்பின் கருத்தை விளக்குக.

(ii) 'புத்தசமயம் யதார்த்தவாதமாகும்' விளக்குக.

(iii) 'அனீஷ்வரவாதம்' புத்தசமயத்தின் சிறப்பான பண்பாகும் என்பதனை எடுத்துக்காட்டுக.

(iv) இவ்வுலக முன்னேற்றத்துக்குரிய பௌத்த போதனைகள் பற்றி எடுத்துக்காட்டுக.

(v) 'ஆத்மதிருஷ்டி' பற்றிய பௌத்த கோட்பாட்டினை எடுத்துக்காட்டுக. (20 புள்ளிகள்)

**3.** (i) 'ஆஜீவக' என்பதனை வரைவிலக்கணப்படுத்துக.

(ii) 'ஸாமீசிபடிபன்ன' குணத்தை விளக்குக.

(iii) '(ஆராமய) மடாலயங்களை ஏற்றுக்கொள்ளல்' என்பது எவ்வாறு ஆரம்பமானது என்பதை எடுத்துக் காட்டுக.

(iv) 'சதுர்வித நிஸ்ஸய தர்ம' என்பதைச் சுருக்கமாக விபரிக்குக.

(v) "சங்கத்திற்கு நன்கொடையாக வழங்கப்பட்ட சொத்துக்கள்" (சாங்கிக தேபல கிரம) பற்றிப் போதுமான மதிப்பீடு செய்க. (20 புள்ளிகள்)

[பக். 2 ஐப் பார்க்க

## பகுதி II

**4.** (i) 'ஸுத்த' எனும் சொல்லின் கருத்தினைப் பரிசீலிக்குக. (08 புள்ளிகள்)

(ii) அபிதர்ம பிடகத்தின் அமைப்புப் பற்றி விபரிக்குக. (12 புள்ளிகள்)

**5.** (i) 'வானபிரஸ்தம் - சந்நியாசம்' எனும் பிராமண ஆச்சிரம தர்மத்தை அறிமுகப்படுத்துக (08 புள்ளிகள்)

(ii) 'பிரஹ்மஸஹவ்யதா' பற்றிப் போதுமானளவு விமர்சிக்குக. (12 புள்ளிகள்)

**6.** (i) 'துக்க நிரோதார்ய ஸத்ய' என்பதைச் சமயரீதியில் விபரிக்குக. (08 புள்ளிகள்)

(ii) "த்ரிவித ஷிக்ஷாவோ பரஸ்பர பயனுடையது" பரிசீலிக்குக. (12 புள்ளிகள்)

**7.** (i) அனுலோம படிச்ச ஸமுப்பாதத்திற்கு அமைவாக துக்கத்தின் தோற்றத்தை விளக்குக. (08 புள்ளிகள்)

(ii) "சமூகம் சார்ந்த பிரச்சனைகளும் கூட தற்செயலாகத் தோன்றுபவையே (படிச்ச ஸமுப்பன்ன)" விமர்சிக்குக. (12 புள்ளிகள்)

**8.** (i) பொருளாதார மற்றும் அரசியல் இரண்டிற்குமிடையிலான தொடர்பினை சூத்திரத்தைச் சார்ந்து எடுத்துக் காட்டுக. (08 புள்ளிகள்)

(ii) சட்டம், ஒழுங்கு என்பவற்றைக் காக்கும் பொருட்டு ஆட்சியாளர் யாது செய்ய வேண்டும் என்பதை புத்த சாசனத்திற்கமைவாக விவாதித்து எழுதுக. (12 புள்ளிகள்)

* * *